POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# போர் வேண்டாம் - பேச்சு நடத்துவோம்

Regd. No. TN - MS [C] 244 Phone: 440212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10! சென்னை 22-5-1986 வியாழன் : வெளியூர் 23 5-1986 வெள்ளி [இதழ் 210,

## பணிந்துவரும் இலங்கை ஜனாதிபதி 'திடீர்' அறிவிப்பு

## இந்தியாவுடன் கூடிய விரைவில் பேச்சுவார்த்தை நடத்த ஒப்புதல்

**கொழும்பு, மே 22- விடுதலைபுலிகளிடம்சிங்கள ராணுவம் தோற்றதைத் தொடர்ந்து இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே பேச்சு வார்த்தை நடத்த ஒத்துக் கொண்டுள்ளார். விரைவில் ஜெயவர்த்தனேவும் இந்திய தூதரும் பேச்சு நடத்த இருக்கிறார்கள்.**

இலங்கையில் யாழ்ப்பாணத்தில் விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ராணுவத்துக்கும் நடந்த கடும் போரில் இலங்கை ராணுவம் தோற்று பின் வாங்கும் நிலை ஏற்பட்டது தெரிந்ததே.

இதே போல் வல்வெட்டி துறையிலும் விடுதலைப் புலிகளின் வீராவேசப் போரைச் சமாளிக்க முடியாமல் ராணுவம் பின் வாங்கியது:

தற்போது யாழ்ப்பாணத்தில் அமைதி நிலவுகிறது என்றாலும் சில பகுதிகளில் துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்பதாகத் தகவல் கிடைத்துள்ளது. நடைபெறும் என்று தெரிகிறது.

### பொருளாதாரம் அழிகிறது

இலங்கையில் தொடர்ந்து இனக் கலவரம் நீடித்து வருவதால் நாட்டின்பொருளாதாரம் பெருமளவிற்கு பாதித்துள்ளது.

நடப்பாண்டு பட்ஜெட்டிலேயே பெரும்தொகை பற்றாக் குறை இருந்தது.

தொடர்ந்து நடந்து வரும் கலவரம்காரணமாக இலங்கைக்குவரும்சுற்றுலா பயணிகள் தற்போது முன்பைப் போல் வருவதில்லை

அதே போல் இலங்கையின் ஏற்றுமதியும் பாதிக்கபட்டுள்ளது.

இதையடுத்து இலங்கையின் நிதியமைச்சர் ரோனி டிமெல் பல்வேறு நாடுகளுக்கும் சென்று நிதி உதவி கோரிவருகிறார்.

பொருளாதார நிலையை சீரமைக்கா விட்டால், 400 கோடி ரூபாய் நிதிஉதவி தருவது கடினம் என சாவதேச நிதி உதவி நிறுவனம் இலங்கை அரசிடம் கண்டிப்புடன் தெரிவித்து விட்டது.

இதே போல் உலகவங்கியின் 500 கோடி ரூபாய் நிதி உதவியும் பொருளாதார சீர்குலைவால் இலங்கைக்கு கிடைக்கவில்லை.

பல்வேறு நாடுகளின் உதவி கோரி சென்ற இலங்கை நிதியமைச்சா டிமெல வெறுங்கையுடன் திரும்பி வந்துள்ளார்.

தொடர்ந்து கலவரங்கள் நீடித்தால் இலங்கையில் பெரும் பொருளாதார நெருக்கடி ஏற்படும் என தெரிவிக்கப்பட்டுள்ளது.

### இலங்கை திட்டம்

இலங்கைத் தமிழர் பிரச்சினைத்தீர சில திட்டங்களை இலங்கை கொடுத்திருந்தது அந்த திட்டங்கள் குறித்து இந்தியா பலவிளக்கங்களைக்கேட்டது. அந்த விளக்கங்களை இலங்கை கொடுத்துள்ளது.

இந்தத் திட்டங்கள் குறித்து இலங்கை அரசுடன் ஈழவிடுதலை இயக்கத்தினர் பேச்சு நடத்த வரவேண்டாமா? மீண்டும் இந்தியாவுடன் தான் நாங்கள் பேச்சு நடத்தும் "அபாயம்" வருமா என்று இலங்கை ராணுவ மந்திரி அதுலத்முதலி கூறி இருந்தார்.

அதாவது இந்தியாவுடன் பேச்சு நடத்த இலங்கை அதிக அக்கறைகாட்டவில்லை என்ற கருத்தை அவர் தெரிவித்திருந்தார்.

ஆனால்யாழ்ப்பாணத்திலும் வல்வெட்டித் துறையிலும் விடுதலைப் புலிகளிடம் சிங்கள ராணுவம் அடி வாங்கியதைத் தொடர்ந்து இலங்கை அரசின் போக்கில் திடீர் மாற்றம் ஏற்பட்டுள்ளது

இந்தியாவுடன் பேச்சு நடத்த இப்போது இலங்கை முன் வந்துள்ளது கொழும்பிலுள்ள இந்தியத் தூதர் தட்சித்துடன் பேச்சு நடத்த இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே முடிவு செய்துள்ளார்

இன்னும் இரண்டு தினங்களில் தீட்சித்தும் ஜெயவர்த்தனேயும் பேச்சு நடத்த இருக்கிறார்கள்.

இலங்கைத் தமிழர் பிரச்சினை தீர இலங்கை அரசு கொடுத்த புதிய திட்டத்தின் அடிப்படையில் பேச்சு வார்த்தை

## மந்திரி சபை மாற்றம் பற்றி ஹெக்டே

பெங்களூர், மே 22— கர்நாடக அமைச்சரவையில் ஜூன் மாதம் முதல் வாரம் மாறுதல் செய்யப்படும் என்று தெரியவருகிறது பல அமைச்சர்கள் பதவி நீக்கம் செய்யபட இருக்கிறார்கள் இலாகா மாற்றங்களும் இருக்கும் என்று கருதபபடுகிறது,

ஜனதாக்கட்சி எம்.எல். ஏ.ககள் கூட்டம் மே 29ந் தேதி நடக்கிறது அப்போது அமைச்சரவை மாற்றம் குறித்து முதல்வர் ஹெக்டே ஆலோசனை நடத்த இருக்கிறார்,

## சட்டமன்ற நடை முறைகள் பற்றிகருத்தரங்கு

சென்னை, மே 22— சட்டமன்ற நடைமுறைகள் குறிதத கருத்தரங்கு ஒன்று உதகையில் நடைபெறுகிறது.

தமிழ்நாடு மாநிலகாமன்வெல்த் பாராளுமன்றசங்கிளை சார்பில் சட்டமன்ற நடைமுறைகள் குறித்த கருத்தரங்கு ஒன்று உதகையில நடைபெறுகிறது.

### உதகையில் நடைபெறுகிறது

இம்மாதம் 26 முதல் 29 வரை உதகை தமிழக மாளிகையில் இக் கருத்தரங்கு நடைபெறுகிறது.

கருத்தரங்கை பேரவைமேலவைதலைவர்கள்முன்னிலையில் ஆளுநர் குரானா துவக்கி வைக்கிறார்.

இதில் பங்கேற்க 70 உறுப்பினர்களுக்கு அழைப்பு அனுப்பப்பட்டுள்ளது.

மேலவைத் தலைவர் ம.பொ.சி. சபாநாயகர் பி, எச். பாண்டியன மேலவை பேரவை துணைத்தலைவர்கள் பேரவை முன்னவர் டாக்டர் நாவலர், மேலவை முன்னவா ஆர்.எம்.வீ எதிர்கட்சித் தலைவர் உ சுப்பிரமணியம், அமைச்சாகள் பண்ருட்டிராமச்சந்திரன், பொன்னையன். ராசாராம் அண்டே ஆகியோர் கலந்து கொள்ளுகிறார்கள்,

சட்டமன்ற நடைமுறைகள் குறித்து 10தலைப்புகளில் விவாதம்நடை பெறுகிறது.

இததகவலை சபாநாயகர் பி. எச், பாண்டியன் தெரிவித்தார.

## இந்திய தூதரகம் ஆக்ரமிப்பு

புதுடெல்லி, மே 22— சிலிநாட்டின் தலைநகரிலுள்ள இந்திய தூதரகத்தை 5 பேர் கொண்ட ஒரு கோஷ்டி ஆக்கிரமித்துக்கொண்டுள்ளதாக செய்திகள் தெரிவிக்கின்றன.

## அமைச்சர் காளிமுத்து தினகரனிடம் நலம் விசாரிப்பு

சென்னை, மே 22— கார் விபத்தில் சிக்கிப் படுகாயமடைந்து தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் கிறித்தவ மத போதகர் தினகரனை அமைச்சர் காளிமுத்து சந்தித்து நலம் விசாரித்து ஆறுதல் கூறினார்.

தினகரன் உடல் நலம் இப்போது தேறிவருகிறது தினகரனின் மகன் பால தினகரன் கூறுகையில் தனது சகோதரி ஏஞ்சலின் உடல் வரும் ஞாயிற்றுக்கிழமை அடக்கம்செய்யப்படுவதாக கூறினார்

தினகரனின் கார் டிரைவரின் சடலம் இன்று உறவினர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

சென்னை பொது மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வரும் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதத்தை முதல்வர் புரட்சித்தலைவர் சந்தித்து நலம் விசாரித்தார்.

## பாகிஸ்தான் அணுநிலையத்தை தகர்க்க சதி: பலத்த பாதுகாப்பு

பாக்ரெய்ன், மே 22— பாகிஸ்தானின் அணு சோதனை நிலையத்தை தகர்க்க சதி நடப்பதாக தகவல் வந்தது. இதைத் தொடர்ந்துபாதுகாப்புக்காக போர் விமானங்களும், ராக்கெட்டுகளும், வைக்கப்பட்டதுடன் அதிரடிப் படையினரும் நிறுத்தப்பட்டுள்ளனர்.

பாகிஸ்தான் அணு ஆராய்ச்சிக் கூட நிபுணர்கள் விரைவில் அணுகுண்டு செய்து விடுவார்கள் என்று இஸ்ரேல் நாடு கருதியது.

அவ்வாறு பாகிஸ்தான் அணுகுண்டு செய்தால் அந்த செய்முறைகளை பாகிஸ்தான் அரபு நாடுகளுக்கு கொடுத்துவிடும் என றுஇஸ்ரேல் கருதியது

தனது எதிரியான அரபு நாடுகளுக்கு அணுகுண்டு செய்யும் முறை தெரிந்து விடக்கூடாதுஎன்றுகருதும் இஸ்ரேல் பாகிஸ்தானின் அணுசக்திக் கூடத்தை அழித்து விட திட்டமிட்டதாம்

இதற்காக பாகிஸ்தானில் உள்ள ஒரு விமானப்படை விமான ஓட்டியை இஸ்ரேல் சரிக்கட்டி அழைத்துச் சென்றதாம். இஸ்ரேல் உளவுத் துறை அந்த விமான ஓட்டிக்கு அணுசக்தி கூடத்தை அழிக்க பயிற்சி கொடுத்து வந்ததாகத் தெரிகிறது.

பின்னர் இஸ்ரேலில் இருந்து அந்த பாகிஸ்தான விமானி திரும்பவும் பாகிஸ்தானுக்குச் சென்று அணுசக்தி கூடத்தைரகசியமாக நோட்டம் விட்டு ஆய்வு செய்தாராம்.

### பணம் பறிமுதல்

இரண்டு முறைஅவ்வாறு சென்று நோட்டம விட்ட விமானி, மூன்றாவதுமுறையாகச் சென்ற போது கராச்சி விமான நிலையத்தில வைத்துகைதுசெய்யப்பட்டார். அவரிடமிருந்து ஏராளமான பணம் கைப்பற்றப்பட்டது. பெஷாவருக்குஅவரை அழைத்துச் சென்று விசாரித்தார்கள்.

அதன்பின சிறையிலிருந்து அந்த விமானி தப்பிச்சென்றார். அவரை மீண்டும் கைது செய்து விட்டனர்.

இஸ்ரேல் உளவுப்படையின் நடமாட்டம் பாகிஸ்தான் விமானப்படை வட்டாரத்தில் அதிகம் இருப்பதாக பாகிஸ்தான் கருதுகிறது அணுசகதி நிலையம் தகர்க்கப்படலாம் என்றும் பாகிஸ்தான் அஞ்சுகிறது.

இதன் காரணமாக இதைத் தொடர்நது அந்த அணுசக்திகூடத்தை சுற்றி பலத்த பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.

விமானம் மூலம் வந்து குண்டு வீசிவிடக் கூடாது என்பதற்காக போர விமானங்களும் நிறுத்தப்பட்டுள்ளன. ஏவுகணைகள் தயாராக வைக்கப்பட்டுள்ளன. அதிரடிப்படையினரும் தயார் நிலையில உள்ளனர்.

### தலைவர்கள் படத் திறப்புவிழா

காஞ்சிபுரம், மே 22— காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் கூட்டுறவு நூற்பாலையில் தலைவர்கள் படத் திறப்பு விழா நடந்தது.

கைத்தறிதுறை இயக்குநர் ஆறுமுகம்தலைமை வகித்தார்,

இந்தியக் குடியரசுக்கட்சியின் தமிழ்நாடு கிளை பொதுச் செயலாளர் தமிழரசன் எம். எல். ஏ முதல்வர் புரட்சித்தலைவர் படத்தைத் திறந்து வைத்தார்.

டாக்டர் அம்பேத்கார் படத்தை காஞ்சி பாலாஜி எம். எல். ஏ. திறந்து வைத்தார்.

முன்னாள் ஜனாதிபதி வி.வி.கிரிபடத்தைமாவட்ட பால்வளத்தலைவர் காஞ்சி பன்னீர் செல்வம் திறந்து வைத்தார். பிரதமர் ராஜீவ் படத்தை மாவட்ட காங்கிரஸ் செயலாளர் ரங்கநாதன் திறந்து வைத்தார்.

இயக்குனர் சண்முக சுந்தரம வரவேற்றுப் பேசினார்,

## சிதம்பரம் நகரசபை துணை தலைவர் தேர்தல்: ஐகோர்ட்டில் வழக்கு

சிதம்பரம். மே 22— சிதம்பரம் நகரசபை துணைத்தலைவர் தேர்தலில் திமுக.வைச் சேர்ந்த கன்னையன் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது செல்லாது என சென்னை ஐகோர்ட்டில் ரிட்மனு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

சிதம்பரத்தில் சிதம்பரம் நகரசபைத் துணைத் தலைவர் தேர்தல்நடந்தது அதில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் கன்னையன் என்பவர் வெற்றிபெற்றார் நகாசபைத் தலைவரும் அதில் ஓட்டு போட்டார்

அத்துடன்ஆதிதிராவிடர் ஒதுக்கப்பட்ட வார்டிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ராஜன் என்பவர் ஒப்பன் ஓட்டுப் போட்டார.

நகர சபைத் தலைவர் எந்த வார்டுக்கும் நகர மன்ற உறுப்பினர் அல்ல. பொது மக்களால் அவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

அதனால் அவர் நகர துணை மன்ற தலைவா தேர்தலில் ஓட்டு போட்டது செல்லாது என்றும் ராஜன் கிறிஸ்துவர் அவர் ஆதி திராவிடர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட வார்டில் நகரமன்ற உறுப்பினராக தேர்தலில் போட்டியிடவே தகுதியில்லாதவர் நகர மன்ற துணைத்தலைவர் தேர்தலில ஓட்டு போட்டது செல்லாது என்றும் வழக்கில் ரிட்மனு தாக்கல் செய்த லட்சுமணன சொல்லியிருக்கிறார்,

20-5-86 உயர்நீதி மன்ற நீதிபதி நடராஜன்மனுவை ஏற்றுக் கொண்டு எதிர் மனதாரர்களுக்கு ஏன் சிதம்பரம் நகரமன்ற துணைத் தலைவர் தேர்தல் செல்லாதுஎன்று அறிவிக்க கூடாது என்பதற்கு விளக்கம் கேட்டு சம்மன் பிறப்பிக்க ஆணையிடப்பட்டிருக்கிறது.

சிதம்பரம் நகரமன்ற உறுப்பினராக ஆதிதிராவிடர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட வார்டில் கிறித்துவர் போட்டியிட தகுதியில்லாதவர் ஆனால் ராஜன் என்பவர் தன்னை கிறித்துவர் எனபதை மறைத்து போட்டியிட்டு வெற்றி பெற்றார். அது பிற்பாடுதான் தெரிந்தது

ஆனால் இந்த விஷயம் ரகசியமாக இருந்திருக்கிறது இப்பொழுதுதான் தெரிய வந்தது என்று செவத்தான் என்ற ஆதிதிராவிடர் சென்னை உயர் நீதி மன்றத்தில வழக்கு தொடுத்திருக்கிறார்,

அந்த மனுவும் 20-5-86 அன்று விசாரணைக்கு வந்தது. அதையும் ஏற்றுக் கொண்டு ஏன் ராஜன் தேர்தலை ரத்து செய்யக்கூடாதுஎன்பதற்கு பிரதிவாதிகளுக்கு சம்மன் பிறப்பிக்க சென்னை உயர் நீதி மன்றம் ஆணையிட்டிருக்கிறது.

## டெல்லியில் நமீபிய தலைவருக்குவரவேற்பு

புதுடெல்லி,மே 22— நமீபிய தலைவர், சாம் நாஜோமா டெல்லிக்கு வந்த போது, உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது

ஆப்பிரிக்க நாடுகள் மீது தென்னாப்பிரிக்கா தாக்குதல் நடத்தி இருப்பது இனவெறி அரசின் அப்பட்டமான ஆக்கிரமிப்பு ஆகும் என நாஜோமா தெரிவித்தார்

தென்னாப்பிரிக்க அரசின் காலனி ஆதிக்கத்திலுள்ள நமீபியாவின் சுதந்திரப் போராட்டத் தலைவரான நாஜோமாவை விமான நிலையத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி வரவேற்றார்.

நமீபிய விடுதலை போராட்டத்திற்கு இந்தியா காட்டி வரும பெரும ஆதரவை என்றும் மறக்க மாட்டோம் என நாஜோமா உருக்கமாக குறிப்பிட்டார்

நாஜோமாவுடன் அவரது மனைவியும் இந்தியா வந்துள்ளார்.

### மதுரை ரயில்நிலையத்தில் தீ

மதுரை. மே 22— மதுரை ரயில் நிலையத்தில் இன்று காலை மின் கசிவு காரணமாக ஏற்பட்ட தீ விபத்தில் முதல் பிளாட்பாரத்திலிருந்த ஆவின் பாலகமும், இமாசல பிரதேச அரசின் ஆப்பிள் ஜூஸ் கடையும், சிற்றுண்டி சாலையும் எரிந்தன.

இந்த தீவிபத்தில் சேதமடைந்த பொருட்களின் மதிப்பு 2 லட்ச ரூபாய் இருக்கும் என்று கருதப்படுகிறது.

## கல்லூரி மாணவியை கடத்த உடந்தையா? பெண் கொலை

சென்னை, மே 22— கல்லூரி மாணவி ஒருவர் கடத்தப்பட்டார். இந்தக் கடத்தலுக்கு உடந்தையாக இருந்ததாகக் கருதி மற்றொரு பெண்ணை 5 பேர் சேர்ந்து கொலை செய்தனர்.

சென்னையை அடுத்த மதுரவாயல் திருவீதி அம்மன் கோவிலைச் சேர்ந்தவர் ஆரோக்கியசாமி. இவரது மனைவி சுமதி (வயது 17.)

சுமதியின் உறவுக்காரப் பெண் கொடிஅழகி பி. எஸ். சி இரண்டாம் ஆண்டு படித்து வருகிறார். கொடிஅழகிக்கும் மற்றொரு வாலிபருக்கும் காதல் இருந்து வந்ததாகவும் காதலனால் சுமதி கடத்தப் பட்டதாகவும் கூறப்படுகிறது.

இவ்வாறு கடத்திச் செல்லப்படுவதற்கு சுமதி உடந்தையாக இருந்ததாக கொடி அழகியின் சித்தப்பா பன்னீர்செல்வம் கருதினாராம்,

இதனால் பன்னீர்செல்வமும் மற்றும் 4 வாலிபர்களும் சேர்ந்து சுமதியைக் வழி மறித்து கத்தியால் குத்தினார்களாம் சுமதி இறந்தார்.

இது தொடர்பாக செங்கற்பட்டு கிழக்குப் பகுதி போலீஸ் சூப்பிரண்டு சுப்பையா உத்தரவின் பேரில் பன்னீர்செல்வமும் மற்றும் 4 பேரும் கைது செய்யப்பட்டனர். போலீசார் மேலும் புலன் விசாரணை நடத்தி வருகிறாரகள்.

**உதவி**

உதவிகள் பலவிதம். அது பொருளாகவும் இருக்கலாம்; வாய் வார்த்தையாகவும் இருக்கலாம். பாத்திர மறிந்து உதவுதல் மிக்க அவசியம்.

—பேரறிஞர் அண்ணா

**கடன்**

உன் வரவுக்குள் செலவை அடக்கினால் நீ ஏன் கடன் படவேண்டும்? வீண் ஆடம்பரம் சடங்குகள் மூலம் கடனாளியாகாதே; அது ஒரு துர்ப்பழக்கம்.

— தந்தை பெரியார்

# பஞ்சாப் மாநில முதல்வர் விலக வேண்டுமாம்: பதவி வெறியர் பேச்சு

ஜலந்தர், மே 22— நாட்டின் நலன் கருதியும் மாநிலத்தின் நலன் கருதியும் சீக்கிய மதத்தின் நலன் கருதியும் பஞ்சாப் முதலமைச்சர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும் என்று முன்னாள் முதல்வர் பாதல் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

கடந்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பின்னர் பஞ்சாப் முதல்வராக பாதல் பெரும் முயற்சி செய்தார். அதேபோல் பாட்டியாலா இளவரசர் அமரிந்தர் சிங்கும் முதல்வராக முயன்றார். ஆனால் சட்டமன்ற அகாலி தளக்கட்சி பர்னாலாவை முதல்வராகத் தேர்ந்தெடுத்தது.

என்றாலும் பர்னாலா அமைச்சரவை கவிழ்க்கபாதல் தொடர்ந்து முயற்சித்து வந்தார். அவர் ஏற்கெனவே இரண்டு முறை பஞ்சாப் முதல்வராக பதவி வகித்தவர். பஞ்சாப் மாநிலத்தில் உள்ள மிகப் பெரும் செல்வந்தர்களில் ஒருவர்.

## பொற்கோவிலில் நடவடிக்கை

அண்மையில் பொற்கோவிலுக்குள் இருந்த சீக்கிய தீவிரவாதிகளை வெளியேற்ற முதல்வர் பர்னாலாவுக்கு அமைச்சரவை அனுமதி அளித்தது. அதனைத் தொடர்ந்து பொற்கோவிலுக்குள் போலிசார் புகுந்தனர்.

இதனைக்காரணம்காட்டி பாதல் கோஷ்டியைச் சேர்ந்த அமைச்சர்களும். சட்டமன்ற உறுப்பினர்களும் தனியாக ஒரு கட்சி அமைத்தனர்,

இந்தப் புதிய கட்சிக்கு பஞ்சாப் சபாநாயகர் ரவி இந்தர்சிங் அங்கீகாரம் அளித்தார். இவரும் பாதலின் நண்பர். பாதலைப் போல் மகப்பெரும் செல்வந்தர்களில் ஒருவர்.

இதனால் பர்னாலா அமைச்சரவை கவிழும் என்று எதிர்பார்த்தார்கள் ஆனால் கவிழவில்லை. பர்னாலா அமைச்சரவைக்கு எல்லா எதிர்கட்சிகளும ஆதரவு அளிக்க முன்வந்திருக்கின்றன.

## வெளியேற்ற முயற்சி

அதன் பின்னர் சீக்கிய மதத்திலிருந்தே பர்னாலாவை வெளியேற்றமுயற்சித்தார்கள் சீக்கிய மதத் தலைமைப்பீடம் பர்னாலாவை அழைத்தது. பொற்கோவிலுக்குள் ஏன் போலீசை அனுப்பினாய் இது மத விரோதம் என்று கூறி சில கோரிக்கைகளை வெளியிட்டது. தண்டனையாகத் தரவில்லை.

பொற்கோவிலுக்குவரும் பக்தர்களின் செருப்புக்களைத் துடைக்கவேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளை பர்னாலா ஏற்றுக்கொண்டார்.

இதனை பாதல் உட்பட பர்னாலாவின் எதிரிகள் எதிர்பார்க்கவில்லை. இந்த வலையிலிருந்து பர்னாலா தப்பிவிட்டாரே என்ற ஆத்திரத்தில் பாதல் அடுத்த கட்டத்திற்குப் போய் இருக்கிறார்.

முதல்வர் பதவியை பர்னாலா ராஜினாமாச் செய்ய வேண்டும் என்று கோரிக்கை விடுத்திருக்கிறார்.

சிறையில் இருக்கும் தீவிரவாதிகளை விடுதலை செய்ய வேண்டும். ராணுவத்திலிருந்து ஓடிப்போன சீக்கியர்களை மீண்டும் ராணுவத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர் கூறினார்.

சென்னை, பொதுமருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் பாண்டுரங்கன் எம்.எல்.ஏ.வை முதல்வர் புரட்சித்தலைவர் சந்தித்து நலம் விசாரித்தார்.

## கோவில்பட்டி நகர்மன்ற துணைத் தலைவர்: கழகம் வெற்றி

நெல்லை, மே 22— கோவில்பட்டி நகர மன்றத் துணைத்தலைவர் தேர்தலில் கழக வேட்பாளர் சுலைமணி எஸ்.எம்.காசி வெற்றி பெற்றார். பின்னர் ஊர்வலமாகச் சென்று அண்ணாசிலைக்கு மாலை அணிவித்தார்.

## ரத்தவெறி பிடித்த வாலிபர் கைது

ரெட்பூர், மே 22— பெண்ணின் தொண்டையை அறுத்து ரத்தத்தை அப்படியே குடித்த வாலிபர் ஒருவரை ரெட்பூர் போலீசார் கைது செய்தனர்.

ரெட்பூர் அருகேஉள்ள ஒரு கிராமத்தில் இந்த பயங்கர சம்பவம் நடந்தது.

மனித ரத்தத்தைக் குடிக்கும் ஒரு தெய்வத்தின் ஆவி இந்த வாலிபர் மீது இருப்பதாக அந்தக் கிராம மக்கள் பயந்தார்கள்.

தகவல் அறிந்த போலீசார் அந்த வாலிபரைப் பிடித்து கைது செய்தனர்

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### கோமதி சீனிவாசன்

மே: 22 தஞ்சை, வலங்கைமான
23. 24. 25 — தொகுதி மக்கள் குறை கேட்டல்
26- அம்மா பேட்டை
27- திருவையாறு

## நாட் குறிப்பு

### தி. நகர்

தி நகர் பகுதி 121-வது வட்ட எம்.ஜி ஆர். மன்றம் சார்பில் கழகப பொதுக் கூட்டம் வரும் 24-ந் தேதி மாலை 7 மணி அளவில் தருமாபுரத்தில் பாஸ்கரன் தலைமையில் நடைபெறுகிறது

இக் கூட்டத்தில் திருவை அண்ணாமலை. வண்ணை கோவிந்தன், ஆடலழகன். டேவிட், கு.க, செல்வம். தி. நகர்மூர்த்தி, பொன்னுரங்கம், வெற்றி மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

### 48-வதுவட்டம்

நாள்:24-5-86 மாலை 7 மணி

இடம்: பிடாரியார்கோவில் தெரு.

தலைமை: ஏ. சங்கர்

முன்னிலை: கு. கஜேந்திர பாபு.

பேசுவோர்:மாடி லட்சுமி எம் வி. இராமன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, எம் எஸ மணி என் ஏ துரை. கே எல்லப்பன் எஸ் ஜெகந்நாதன், எல. குமார், டி. அயாதப்பாட்சா, வி அருள், எஸ். மோகன், டி. ஆர். வெங்கடேசன். பி ஜி. விஜயன் மற்றும் பலர்.

நன்றி: கே. பாலன்

### சூளைமேடு

25-5-86 மாலை 7 மணிக்கு கங்கையம்மன் கோவில் அருகில் ஏ. எம. செண்பகராசன் தலைமையில் பேசுவோர்: க சுப்பு எம்.எல்.சி. மதுசூதனன் எம்.எல்.சி. கு.க. செல்வம், வ. கோதண்டராமன் துவாரகநாதன் மற்றும். பலர்.எம்.எம சாமி கலைக்குழுவினர் கலை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

நன்றி, ஏ. சுப்பிரமணி

# தமிழ்ப்படங்கள் சென்சார்: தாமதத்தை தவிர்க்க கோரிக்கை

புதுடெல்லி, மே. 22- தமிழபடங்கள் சென்சார் செய்யப்படுவது தாமதமாவதை தவிர்க்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஏ. சி சண்முகம் வலியுறுத்தினார்

நாடாளுமன்றத்தில் தமிழ்நாடு திரைப்படத் தணிக்கைக் குழுவின் குறைகள் பற்றி ஏ. சி. சண்முகம பேசியதாவது:-

தமிழ், தெலுங்கு மலையாளம் மற்றும் தென்னிந்திய மொழிப்படங்களை ஒரு வருடத்திற்கு முன்னூறுக்கு மேல் எடுப்பதில சென்னை ஒரு முக்கிய இடமாக விளங்குகிறது. வருடத்திற்கு சென்னையில் மட்டும் 150 தமிழ்ப படங்களுக்குக் குறையாமல் தயாராகின்றது. திரைப்படத் தொழிலில கோடிக்கணக்கான ரூபாய்கள் முதலீடு செய்யப்பட்டு வருகிறது.

## ஆட்கள் பற்றாக்குறை

சென்னையில் இருக்கும் மத்திய திரைப்படத் தணிக்கையாளர் அலுவலகத்தில் குறைவான ஆட்கள் வேலை செய்கின்ற காரணததால் வேலை தாமதமாகின்றது தற்போது சென்னையில் மட்டுமே ஒரு மண்டல அலுவலகம் இயங்கி வருகின்றது.

மண்டல அலுவலர் இத் தணிக்கைத் துறை வேலையோடு மட்டுமின்றி. பொது மக்கள் தகவல், மற்றும் தொடர்பு, வேலைகளையும் கவனிக்க வேண்டி இருப்பதால் காலதாமதம் ஏறபடுகின்றது.

இதனால் சென்னையில் தயாராகும் திரைப்படங்களுக்கு நற்சான்று வாங்குவதற்கு காலதாமதம் ஏற்படுகிறது உதாரணமாக கடந்த ஏப்ரல் 14-ந்தேதி யன்று தணிக்கைக்கென்று அனுப்பப்பட்ட மூன்று தமிழ்ப் படங்கள் இன்னும் அதிகாரிகளால் பார்க்கப் படவில்லை. காரணம் அவர்களின் வேலை பளு தான், இதனால் படத்தயாரிப்பாளர்கள் குறிப்பிட்ட தினத்தில் தம்முடைய படத்தை வெளியிட இயலாமல் பெரும் அவதிக்கும், நட்டத்திற்கும் ஆளானார்கள்.

தென்னிந்திய திரைப் படத் தயாரிப்பாளர்கள் சங்கம் இதுவரை பலமுறை எடுத்துக் கூறியும்சிலமாதங்களாகியும்கூட நடவடிக்கை ஏதும் எடுக்கப்படவில்லை.

இந்த அவையின் மூலமாக நான் செய்தி மற்றும் ஒலிபரப்பு அமைச்சரைக் கேட்டுக்கொள்வதெல்லாம் சென்னையில் உள்ள மண்டல அலுவலகத்திற்கு நிரந்தரமான முழுநேர பணியாளர்களையும் தனி அதிகாரியையும் நியமித்து நலிந்து கிடக்கும் திரைப் படத் தொழிலுக்கு மேலும் நட்டம் வராமல் பாதுகாக்க வேண்டும் என்பது தான்

இவ்வாறு ஏ.சி சண்முகம் கூறினார்.

# கார் விபத்தில் சிக்கிய கிறிஸ்துவ மத போதகருக்கு சிகிச்சை

சென்னை, மே 22- பிரபல கிறிஸ்தவ பிரசாரகர் சகோதரர் டி ஜி. எஸ். தினகரன் சென்ற கார் பயங்கர விபத்துக்குள்ளாகியது. அவருடைய மகள், டிரைவர் ஆகியோர் அதே இடத்தில் உயிரிழந்தனர்,

நேற்று காலை 6மணி அளவில் மீனம்பாக்கம் அருகே நடந்த இந்த பயங்கர விபத்து பற்றிய விபரமாவது:

பிரபல கிறிஸ்தவ மதப் பிரசாரகர் சகோதரர் டி. ஜி.எஸ்.தினகரன் சென்னை அடையாறில் வசித்து வருகிறார்.

அவர் நேற்று காலை மங்களூருக்குச் செல்ல விமான நிலையத்துக்குக் காரில் குடும்பத்துடன் சென்றார்.

தினகரன், அவரது மனைவி ஸ்டெல்லா, மகள் மற்றும் உறவினர் எர்னஸ்ட் ஆகியோர் விமான நிலையத்துக்குச் சென்றார்கள்.

## பயங்கர மோதல்

கார் விமானநிலையத்தை நெருங்கியபோது எதிரே வந்த வீடியோ டூரிஸ்ட் பஸ் ஒன்று காரின் மீது படு வேகமாக மோதியதாக கூறப்படுகிறது

தினகரன் சென்ற கார் உடைந்து சின்னாபின்னமாகி சிதறியது.

சகோதரர் தினகரன் மற்றும் அனைவரும் படுகாயம் அடைந்தனர்.

தினகரனின் மகள் டிரைவர் ஆகியோர் அதே இடத்தில் மாண்டனர்.

தினகரன், அவரது மனைவி ஸ்டெல்லா, உறவினர் எர்னஸ்ட் ஆகியோர் படுகாயம் அடைந்தனர்

காயம் அடைந்த அனைவரும் சென்னை பொது மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர், பின்னர் அவர்கள் கோடம்பாக்கத்தில் உள்ள விஜயா நர்சிங் ஹோமில் சேர்க்கப்பட்டனர்.

தகவல் அறிந்ததமிழ்நாடு போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரவீந்திரன், இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீபால் செங்கற்பட்டு மாவட்ட போலீஸ் சூப்பிரெண்டு சுப்பையா ஆகியோர் விபத்து நடந்த இடத்துக்கு விரைந்து சென்று பார்வையிட்டனர்.

மருத்துவ மனை சென்று தினகரன், அவரது மனைவி உறவினர் ஆகியோரையும் அவர்கள் பார்த்தனர்.

இந்த விபத்து தொடர்பாக வீடியோ டூரிஸ்ட் பஸ் டிரைவரை போலீசார் கைது செய்துள்ளனர்.

மீனம்பாக்கம் போலீசார் விபத்துகுறித்துவிசாரணை செய்து வருகிறார்கள்,

## ஹெக்டேவுடன் துணை சபாநாயகர் தம்பிதுரை சந்திப்பு

பெங்களூர், மே 22— பெங்களூரில் உடல் நலமின்றி சிகிச்சை பெற்று வந்த கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேவை நாடாளுமன்ற துணைசபாநாயகர் தம்பிதுரை சந்தித்து உடல்நலம் விசாரித்தார்.

## பெங்களூரில் பறக்கும் தட்டு

பெங்களூர், மே 22— பெங்களூரில் அடையாளம் தெரியாத பறக்கும் தட்டு ஒன்று வானத்தில் தெரிந்தது

பெங்களூரில் நேற்று இரவு 9.15மணிக்கு வானத்தில் பறக்கும தட்டுப் போன்ற ஒரு அடையாளம் தெரியாத பொருள் மிக வேகமாக சென்றது சில வினாடிகள் அது வானத்தில் தெரிந்தது.

வாணவெடி போல பளபளவென ஒளிவிட்டு பிரகாசித்த அந்த பறக்கும்தட்டு 15 வினாடி நேரம் வானத்தில் தெரிந்தது. பின்னர் அது மர்மமாக மறைந்தது

இரண்டு உயரமான பலமாடி கட்டிடங்களுக்கு இடையே இந்த பறக்கும் தட்டு காணப்பட்டதாக பெங்களூர் விமானப் போக்குவரத்து கட்டுப்பாடு பிரிவு தெரிவித்தது இந்த இரண்டு கட்டிடங்களுக்கு இடையே 2 கிலோ மீட்டர்தூரம் உள்ளது.

இந்தபறக்கும் தட்டை பெங்களூர் நகரம் முழுவதும் உள்ள மக்கள் பார்த்ததாகதெரிவித்தனர்

## இந்தியா பாகிஸ்தான் இடையே ரயில் போக்குவரத்து

புதுடெல்லி. மே 22— இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்குமிடையே ரயில் போக்குவரத்தை விரிவுபடுத்துவது பற்றி இருநாட்டு அதிகாரிகளும் பேசியுள்ளனர்.

இந்தியா, பாகிஸ்தான் இடையே அமிர்தசரஸ், லாகூர் நகரங்களுக்கு ரயில் போக்குவரத்து நடைபெறுகிறது. தற்போது ராஜஸ்தானிலுள்ள முனாபாத்துக்கும், பாகிஸ்தானிலுள்ள கோக்ராபூருக்குமிடையே ரயில் போக்குவரத்தை விஸ்தரிப்பது பற்றி இரு நாட்டு அதிகாரிகளும் பேசினர்.

இந்தியா சார்பில் ரயில்வே போர்டு இயக்குனர் லால் ஜானியும் மற்ற அதிகாரிகளும் பேசினர்.

## வங்கியில் மோசடி: குமாஸ்தா கைது

சென்னை, மே 22— வங்கியில் ஒரு லட்ச ரூபாய் வரை மோசடி செய்த குமாஸ்தா கைது செய்யப்பட்டுள்ளார்.

சென்னை வடக்கு கடற்கரை சாலையிலுள்ள வங்கி ஒன்றில் குமாஸ்தாவாக பணிபுரிபவர் சீனிவாசன் (வயது 36) இவர் லாயிட்ஸ் காலனியில் வசித்து வந்தாராம். இவர் வங்கியில் ஒரு லட்ச ரூபாய் வரை மோசடி செய்தாராம்.

இதையடுத்து வங்கி அதிகாரிகள் மத்திய குற்றப் பிரிவு போலீசில் புகார் கொடுத்ததையடுத்து இன்ஸ்பெக்டர் நாகூர் மீரான் சீனிவாசனை கைது செய்தார்.

# காஞ்சிபுரம் கோவில் கொள்ளை பற்றி துப்பு கிடைத்தது

சென்னை, மே 22— காஞ்சிபுரம் வரதராஜ பெருமாள் கோவில கொள்ளைபற்றி துப்பு கிடைத்துள்ளது.

காஞ்சிபுரத்திலுள்ள புகழ்பெற்ற வரதராஜ பெருமாள் கோவிலில் கடந்த 6ந தேதி இரவு துணிகர கொள்ளை நடந்தது.

இது பற்றிய தகவல் கிடைத்ததும் போலீஸ் ஐ ஜி. ஸ்ரீபால் உள்ளிட்ட உயர் போலீஸ் அதிகாரிகள் சென்று விசாரணை நடத்தினர்

இந்தக்கொள்ளை பற்றி அறிய சூப்பிரண்டு சரவணப்பெருமாள் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது.

ஏழு பேர் சேர்ந்து இந்த கொள்ளையை நடத்தியிருக்கிறார்கள் என்ற தகவல் கிடைத்தது. அவர்களைக் கைது செய்யும் வேலையில் போலீசார் ஈடுபட்டுள்ளனர்

இந்தக் கொள்ளையில் ஈடுபட்டவர்கள் கடந்த 9-ந் தேதி இரவு கோவில் திறந்திருந்தபோது உள்ளே சென்று நகைகளை கொள்ளையடித்து விட்டு மற்ற கூட்டாளிகள் உதவியுடன் தப்பி இருக்கின்றனர்.

கொள்ளையர்களை விரைவில் பிடித்துவிடுவோம் என்று டி ஜி பி ரவீந்திரன் தெரிவித்துள்ளார்.

சோழேசுவரம் கோவிலில் கொள்ளையடிக்க முயன்ற மூன்று பேரை போலீசார் கைது செய்துள்ளனர். மோரணர் கிராமத்தை சேர்ந்த சின்னராசு, பாலுச்செட்டி சத்திரம் அருகேயுள்ள மேலக்கதிரப்பூர் காலனியைச் சேர்ந்த ஏழுமலை மற்றும் கிளியப்பன் ஆகியோர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

## திருச்சியில் மழை

திருச்சி மே 22— திருச்சியிலும் அதன் சுற்றுப புறங்களிலும், நேற்று மாலை மழை பெய்தது இதனால் கோடையின் கடும் வெப்பம் ஓரளவு தணிந்தது.

# தர்மபுரி மாவட்டம்: ரூபாய் 96 கோடியில் குடிநீர் திட்டம்

புதுடெல்லி, மே. 22— தர்மபுரி மாவட்டத்துக்கு ரூபாய் 96 கோடியில் குடிநீர் பணிகளை மேற்கொள்ள திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

இது தொடர்பாக டெல்லியில் மத்திய அமைச்சர் மற்றும் அதிகாரிகளுடன் உக்கம்சந்த் ஆலோசனை நடத்தினார்.

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ்டி உக்கம்சந்த,டெல்லியில், மத்திய விவசாயத் துறை அமைச்சர் ஜி எஸ் தில்லான். மத்திய நகர வளர்ச்சித்துறை அமைச்சர் தல்பீர்சிங். பாராளுமன்ற துணை சபாநாயகர் தம்பிதுரை ஆகியவர்களோடு, தர்மபுரி மாவட்டம் முழுமைக்கும் குடிநீர் வழங்குகின்ற ரூபாய 96 கோடிக்கான திட்டத்தைப பற்றிய ஆய்வில் கலந்து கொண்டார். இத்திட்டத்தின் முக்கிய மற்றும் அத்தியாவசியமான கருத்துக்களை தெரிவித்ததோடு இத்திட்டத்திற்கு மத்திய அரசு ஒப்புதல் அளிக்க வேண்டுமென்றும் அவர் கேட்டுகொண்டார் அவரது வேண்டுகோளை ஏற்று மத்திய விவசாயத்துறை அமைச்சர் ஜி எஸ் தில்லான் இத்திட்டத்திற்கான மத்திய அரசின் ஒப்புதலைப் பெற ஆவன செய்வதாகக் கூறினார்.

# ஒருநாள் கிரிக்கெட்: டி.வி.யில் நேரிடை ஒலிபரப்பு கிடையாது

பம்பாய், மே 22— இங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும இடையே இம்மாதம் 24, மற்றும் 26-ம் தேதிகளில் இங்கிலாந்தில் நடைபெற உள்ள இந்தியா - இங்கிலாந்து ஒருநாள் கிரிக்கெட் போட்டி டெலிவிஷனில் நேரிடையாக ஒலிபரப்பப்படமாட்டாது.

இந்த போட்டியை ஒலிபரப்ப பல்வேறு விளம்பரதாரர்களும் முன்வந்துள்ள இருந்தும் எவை காரணத்தாலோ, நேரிடை ஒலிபரப்பு இல்லை என அறிவிக்கப்பட்டுள்ளது

விளையாட்டின் முக்கிய பகுதிகள் கூட ஒலிபரப்பப் படமாட்டாது எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M- K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road MADRAS-29.

## வல்வெட்டித்துறை - அம்பாறை பகுதிகளிலும் சிங்கள ராணுவம் ஓட்டம்

# விடுதலைப்புலிகள் வீராவேசதாக்குதல்

**கொழும்பு, மே 22- யாழ்ப்பாணம் பகுதியில் விடுதலைப்புலிகளின் பதிலடியை சமாளிக்க முடியாமல் பின் வாங்கி இலங்கை ராணுவம் வல்வட்டித் துறையில் குண்டு வீசித் தாக்கியது. ஆனால் அங்கும் விடுதலைப்புலிகளின் தாக்குதலைசமாளிக்க முடியாமல் ராணுவத்தினர் பின்வாங்கினர்.**

யாழ்ப்பாணம் பகுதியில் சிங்கள ராணுவம் விடுதலை புலிகள் மீது கடுந்தாக்குதலை நடத்தியது.

ஆனால் சிங்கள ராணுவத்தினரின் தாக்குதலை விடுதலைப் புலிகள் சமாளிததோடு மட்டுமல்லாது தக்கமுறையில் பதிலடி கொடுத்தனர் விடுதலைபுலிகளின் கடுமையான தாக்குதலை சிங்கள ராணுவத்தினரால் சமாளிக்க முடியவில்லை.

இதையடுத்து ஆயிரம் பேர் கொண்ட படைபிரிவு ஒன்றை இலங்கை ராணுவம் யாழ்ப்பாணததிற்கு அனுப்பி வைத்தது

ஆனால் இவர்களால் யாழ்ப்பாணம் பகுதிக்கே செல்ல முடியவில்லை.

சிங்கள ராணுவ வீரர்கள் விடுதலைபுலிகளின் கண்ணி வெடிக்கு பலியாகி விடுவோமோ என அஞ்சி நடக்கவே பயப்படுகிறார்கள் எனக் கூறப்படுகிறது.

யாழ்ப்பாணம் பகுதியில் விடுதலைப் புலிகளின் கடுந்தாக்குதலை சமாளிக்க முடியாமல் பின் வாங்கிய இலங்கை ராணுவம், வல்வெட்டித்துறை மீது விமானத் தாக்குதலை நடத்தியது.

ஆனால் வல்வெட்டித் துறையிலும் விடுதலைப் புலிகள் சிங்கள ராணுவத்தினர் மீது திருப்பித் தாக்கினார்கள்,

சிங்கள ராணுவத்தினரின் ஹெலிகாப்டர்கள் மற்றும விமானங்கள் மீது விடுதலைப் புலிகள் ராக்கெட்டுகளை வீசித் தாக்கினார்கள்

இப்பகுதியில் மட்டும் 75 சிங்கள ராணுவத்தினர் இறந்தனர்.

வல்வெட்டித் துறையில் காயமடைந்த சிங்கள ராணுவ சிப்பாய்கள் கொழும்பு மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டனர்.

ஈழத்தின் வடபகுதி முழுவதும், விடுதலைப்புலிகளின முழு கட்டுப்பாட்டில் உள்ளது.

### வீராவேச போர்

அம்பாறை பகுதியில் சிங்கள ராணுவத்தினர் பாலம் ஒன்றை போட முயற்சிததனர்.

இதை நூற்றுக்குப்மேற்பட்ட விடுதலைப் புலிகள் நவீன ஆயுதங்களைக் கொண்டு தாக்கினர்.

இதையடுத்தும் அங்கிருந்தும் சிங்கள ராணுவம் பின் வாங்கியது

### சிமெண்ட் தொழிற்சாலை தகர்ப்பு

திரிகோணமலையில் உள்ள அரசுக்குச் சொந்தமான சிமெண்ட் ஆலை ஒன்று தகர்க்கப்பட்டது.

### கம்யூனிஸ்ட் எம்.பி. மரணம்

இலங்கை நாடாளுமனறத்தின் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரான சாராத் முத்தெட்டுவெஸ்மா காலமானார்.

கம்யூனிஸ்ட் எம்.பி.யின் மரணத்திற்கு விடுதலைப் புலிகள இயக்கத் தலைவர் பிரபாகரன் அனுதாபம் தெரிவித்துள்ளார்.

### கொழும்புவில் தகராறு

கொழும்புவில் சிங்கள ராணுவத்தினர், சிலர் குடித்துவிட்டு முஸ்லிம் பெண்களிடம் சென்று வம்பு செய்தனராம்.

இதையடுத்து அப்பகுதியில் கலவரம் மூண்டது இதில் 6 பேர் இறந்தனர்.

பின்னர் இலங்கை பிரதமர் பிரேமதாசா அப்பகுதிக்குச் சென்று அமைதி காக்கும்படி வேண்டுகோள் விடுத்தார்.

கொழும்பில் முஸ்லிம்களுக்கும ராணுவததினருக்கும் இடையே 2-வதுமுறையாக தகராறு நடைபெற்றுள்ளது

இந்த தகராறினால், முஸ்லீம்கள் பலர் தங்கள் நோன்பை கைவிட நேர்ந்ததாகவும் கூறப்படுகிறது

## செயற்கை சிறுநீரக சுத்திகரிப்பு கருவி

தஞ்சாவூர், மே 22— சிறு நீரகம் பாதிக்கப்பட்டவர்களுக்கு ரத்தத்தை சுத்திகரிக்க பயன்படுத்தப்படும் ஹிமோடயாலிசிஸ்கருவி தஞ்சைமருத்துவ கல்லூரி மருத்துவமனையில் அமைக்கப்பட்டுள்ளது

இந்தக் கருவியின் மதிப்பு 2 லட்ச ரூபாயாகும் இந்த கருவி வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு அமைக்கப்பட்டதாக மருத்துவமனை வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

## அரூர் ஊராட்சி ஒன்றிய தலைவர் மக்கள் குறை கேட்டார்

கருமபுரி, மே 22- அரூர் ஊராட்சி ஒன்றிய பெருந்தலைவர் ஜி. வெள்ளைமுருகன் அரூர் ஊராட்சி ஒன்றியத்தில்சுற்றுப்பயணம் செய்து மனுக்களை பெற்றார்,

அரூர் நகரில் செருப்பு தைக்கும் தொழிலாளி, தச்சுத்தொழில், சுண்ணாம்பு ஆலைத்தொழில். மண்பாண்டம் தொழில் செய்வோர்களையும் அதற்கான இடங்களையும் பார்வையிட்டார.

நாச்சனாம்பட்டிகிராமத்தில் பாய் நெசவு செய்யும் தொழிலாளர்களை சந்தித்து அவர்களிடம் மனுக்களை பெற்றுக் கொண்டார். மற்றும் முத்தானூர், ஈட்டியம்பட்டி. கல்உடைக்கும் தொழிலாளர்களை சந்தித்து கல் உடைக்க கூட்டுறவுமுறையில் சொஸைட்டி அமைக்க உறுதி கூறினார்.

வேப்பம்பட்டி, மாம்பாடி கூடலூர். நரிப்பள்ளி போன்ற பகுதிகளில் மண்பாண்டம் செய்யும் தொழிலாளர்களை சந்தித்து கூட்டுறவுமுறையில் சொஸைட்டி அமைக்க உறுதி அளித்தார்,

## ரூ. 400 கோடி போதைப் பொருள்கள் பறிமுதல்

புதுடெல்லி, மே 22— 400 கோடி ரூபாய் பெறுமானம் உள்ள போதைப் பொருள்களை வருவாய்த் துறை அதிகாரிகள் புதுடெலலியில் கைப்பற்றினார்கள்,

புதுடெல்லியில் இருந்து அரியானாவுக்கு சென்று கொண்டிருந்தஒருலாரியை திடீர் சோதனை நடத்திய போது இந்தப் பொருள்கள் சிக்கியது.

இந்தப் பொருள்கள் பாகிஸதானில் இருந்து கடத்திலந்ததாகக் கூறப்படுகிறது.

## மருத்துவமனையில் பாண்டுரங்கன்: அமைச்சர்கள் பார்த்தனர்

சென்னை, மே 22— கார்விபத்தில்காயமடைந்த கழக எம். எல். ஏ. பாண்டுரங்கன் சென்னை பொது மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

அவரை அமைச்சர்கள் ஆர்.எம்.வீ, முத்துசாமி, ஆனூர் ஜெகதீசன் ஆகியோர் பார்த்து உடல் நலம் விசாரித்தனர்.

## நாராயணன் வீட்டில் மத்திய மந்திரி

நெல்லை, மே 22— மறைந்தகழக சட்டமன்ற உறுப்பினர் பாளை நாராயணன் இல்லத்திற்கு மத்திய அமைச்சர் அருணாசலம் சென்று அவரது குடும்பத்தினருக்கு ஆறுதல கூறினார். அவருடன் அல் போன்ஸ், வேணுகோபால் மற்றும் பலர் சென்றிருந்தனர்.

## பழவேற்காடு சுற்றுலாமையம் ஆக்கப்படுகிறது

மதுராந்தகம், மே 22— செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள பழவேற்காடு சுற்றுலா மையமாக ஆக்கப்படுகிறது.

சென்னையை அடுத்த பழவேற்காடு சுற்றுலா மையமாக ஆக்கப்படுகிறது இதற்காக அங்கு பல்வேறு வசதிகள் செய்வதற்காக 28 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. சுற்றுலா விடுதிகள், லாட்ஜ் ஆகியவையும் கட்டப்படுகிறது.

### பறவைகள் சரணாலயம்

குழந்தைகள் பூங்கா உல்லாச படகு சவாரியும் விடப்படுகிறது. அண்ணாமலைச்சேரிக்கு ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கான பறவைகள்வருவது உண்டு. இந்த ஆண்டு 120 வித பறவைகளவந்துள்ளதாகத் தெரிகிறது.

அண்ணாமலைச்சேரியில் பறவைகள் சரணாலயப் விரிவு படுத்தப்படவுள்ளதாகவும் மாவட்ட ஆட்சித் தலைவர் மாத்யூ தெரிவித்துள்ளார்.

ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் கடற்கரை ஓரப் பகுதிகளில் கலங்கரை விளக்கம் அமைக்க மத்திய அரசு உத்தரவிட்டுள்ளது இதன்படி தமிழ்நாட்டில்பழவேற்காட்டில் கலங்கரை விளக்கம் அமைக்கப்படுகிறது.

## கோவை நகரில் கழகதோழரை கொல்ல தி. மு. க. முயற்சி

கோவை, மே 22— கோவையில் கழகத் தோழர் ஒருவரை கொலை செய்ய தி.மு.கவைச்சேர்ந்தஒரு ஆசாமி முயனறுள்ளார். கோவை மாநகர் மாவட்ட துணைச் செயலாளர் புரட்சிததமபி கழகப் பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்த போது திமுக. வைச் சேர்ந்த காந்தாமணி என்பவர 5 அடி நீளமுள்ள பட்டாக் கத்தியுடன தரக்குறைவான வார்த்தைகளைப் பேசிக் கொண்டு கொலை வெறியோடு வந்தாராம். பொதுமக்களாலும் கழகத் தோழர்களாலும் காப்பாற்றப்பட்டு அதிர்ஷ்டவசமாக புரட்சித்தம்பி உயிர் பிழைத்தார் கொலை முயற்சியில் ஈடுபட்ட காந்தாமணி என்ற தி.மு.க நபர் தப்பி ஓடிவிட்டார் உடனே பீளமேடு பி 6 காவல் நிலையத்திற்கு சென்று புரட்சித்தம்பி புகார் செய்துள்ளார்.

## 'ராஜீவ் என் பேரன் மாதிரி' கமலபதி திரிபாதி பேச்சு

வாரணாசிமே 22— 'ராஜீவ்காந்தி என பேரன மாதிரி" என்று இந்திராகாங்கிரஸ் செயல்தலைவர் கமலபதி திரிபாதி கூறினார.

வாரணாசியில அவர் நிருபர்களிடம் கூறியதாவது

ராஜீவ்காந்தியின் [illegible] அவர் என் பேரனைப் போன்றவர். அவர் தப்பு செய்தால நான் எச்சரிக்க முடியும்

கட்சியைப் பொறுத்தமட்டில் ராஜீவ் எனக்குத் தலைவர். அவரை நான் பின்பற்ற வேண்டும்.

நான் ஒரு இந்து அந்து [illegible] காங்கிரஸ்காரன் இந்து மதத்திலிருந்து எப்படி நான் விலக மாட்டேனோ அப்படி காங்கிரசிலிருந்தும் விலக மாட்டேன்.

நான் காங்கிரஸ்காரனாகவே இருந்தேன்- இருக்கிறேன்- இருப்பேன். இந்த கட்சி வாழ்ந்தால நாடு வாழும், காங்கிரஸ் அழிந்தால நாடு அழியும்.

இவ்வாறு கமலபதிதிரிபாதி கூறினார்.

## பஞ்சாபில் பயங்கர கோஷ்டி மோதல்: 10 பேர் சுட்டுக்கொலை

சண்டிகர், மே 22— பஞ்சாபில் இரு சமூக மக்களிடையே ஏற்பட்ட மோதலில்சீக்கிய தீவிரவாதிகள் பத்து பேரை சுட்டுக் கொன்றனர்.

சண்டிகர் அருகே உள்ள தாரிவல்காலன் என்ற கிராமத்தைச்சேர்ந்ததீவிரவாதி ஜஸ்வந்த் சிங்.

இவர் ரகசியமாக துப்பாக்கி தயாரிக்கும்தொழிற்சாலை நடத்தி வந்தார.

கடந்த 2 ஆண்டுகளாக இந்த தொழிற்சாலை நடந்து வந்திருக்கிறது.

சீக்கிய தீவிரவாதிகட்கு வேண்டிய துப்பாக்கிகள், ரிவால்வர்கள் ஆகியவை இங்குதான் செய்யப்பட்டன. சீக்கிய தீவிரவாதிகளுக்கு கை கொடுத்து வநதது இந்த ரகசிய துப்பாக்கித் தொழிற்சாலை தான்!

குருதாஸ்பூர் போலீசார் தீவிரவாதிகளை வலை வீசித் தேடி வந்தனர். அப்போது இந்த ரகசிய துப்பாக்கித் தொழிற்சாலை கண்டு பிடிக்கப்பட்டது. அதை நடத்தி வந்த ஜஸ்வந்த்சிங் கைது செய்யப்பட்டார்.

அந்த தொழிற்சாலையிலிருந்த ஏராளமான துப்பாக்கிகள், ரிவால்வர்கள், வெடி மருந்துகள் ஆகியவற்றை போலீசார் கைப்பற்றினர்.

சீக்கிய பயங்கரவாதிகள் மூவர் ஸ்கூட்டரில் சென்று இரு வேறு இடங்களில் ரூபாய் 35 ஆயிரம் கொள்ளை அடித்தனர்.

அந்த மூன்று நபர்களையும் போலீசார் கைது செய்தனர்.

### சட்டம்-ஒழுங்கு திருப்தி

பஞ்சாபில் சட்டம்-ஒழுங்கு நிலைமை திருப்திகரமாக இருப்பதாக முதல்வர் பர்னாலா தெரிவித்தார்:

கவர்னர் சித்தார்த்த சங்கர் ரேக்கும், தனக்கும் கருத்து வேறுபாடு இல்லை என்றும் சுமுக உறவு இருப்பதாகவும் அவர் கூறினார்.

### ஒற்றுமை முயற்சி

டெல்லி சென்றமுதல்வர் பர்னாலா நிருபர்களிடம் கூறியதாவது:—

அகாலிதள கட்சிக்குள் ஒற்றுமையை ஏற்படுத்த இருதரப்புக்கும் பொதுவான சில நண்பர்கள் முயற்சி செய்கிறார்கள்.

பஞ்சாபில்அமைதி நிலவ அகாலி தளக் கட்சிக்குள் ஒற்றுமை அவசியம்.

பொற் கோவிலுக்குள் போலீசை அனுப்பியதற்காக செருப்பு துடைக்கும் தண்டனையை மதகுருக்கள் ஐவர் எனக்கு விதித்தனர். அதன்படி நானும் செருப்பு துடைத்து தண்டனையை அனுபவித்தேன். இதற்குப் பிறகு அகாலிதளக்கட்சியிலுள்ள அதிருப்தியாளர்கள மனம்மாறிஒன்றுபட்டு அகாலிதளக்கட்சியை பலப்படுத்த முன்வரவேண்டும்,

அதிருப்தியாளர்களின் கோரிக்கைகள் பற்றிபேச்சு நடத்தி தீர்த்துக் கொள்ளலாம் எனவே அவர்கள் அகாலிதளக்கட்சிக்கு மீண்டும் வரவேண்டும்.

அகாலிதளக் கட்சிக்குள் ஒற்றுமை ஏற்படுத்த பொது நண்பர்கள் முயற்சிக்கிறார்கள் அவர்களில் அர்ஜுன் சிங்கும் ஒருவர் என்று கூறுகிற கருத்து சரியானதல்ல.

பஞ்சாபில் குருதாஸ்பூர், அமர்தசரஸ் ஆகிய மாவட்டங்களிலிருந்து மக்கள் வெளியிடங்களுக்கு குடி பெயர்ந்துள்ளனர். மக்கள் பயந்து ஊரை விட்டு ஓடிப்போய் விட்டார்கள் என்று கூறுவது சரியல்ல.

உறவினர் வீடுகளுக்கு போய் உள்ள அந்த பகுதி மக்கள் திரும்பிவர வேண்டும் அவர்களுக்கு போதிய பாதுகாப்பு கொடுக்கப்படும்.

இவ்வாறு பர்னாலா கூறினார்.

அகில இந்திய சீக்கிய மாணவர் சம்மேளனம் (மஞ்சித் கோஷ்டி) செயல் வீரர் படை ஒன்றை அமைக்க இருக்கிறது.

பொற்கோவிலின் புனிதத் தன்மையைக் காக்க இந்த நடவடிக்கை எடுக்கப் போவதாக இது அறிவித்துள்ளது.

பஞ்சாபில் எல்லாசமூகங்களையும் சேர்ந்த மத குருக்கள் மே 25ந்தேதி லூதியானாவில் கூடிப்பேசுகிறார்கள்.

பஞ்சாப் மக்களிடையே ஒற்றுமை நிலவுவதற்காக அவர்கள் கூடிப் பேசி முடிவு எடுப்பார்கள்.

வன்முறையாளர்களுக்கு எதிராக சாத்வீகப்போர் நடத்தவும் முடிவு செய்துள்ளோம் என்று இந்தக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்துள்ள ஜைன மதத்தலைவர் ஆசாரிய சுசில்முனி கூறினார்.

### பயங்கர கலவரம்

அமிர்தசரசை அடுத்துள்ள கிருஷ்ண் நகர் பகுதியில் இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் பயங்கர மோதல் ஏற்பட்டது கடந்த 10 நாட்களாகவே அங்கு பதட்ட நிலை இருந்து வந்தது. முன்பு நடந்த மோதலில்3பேர் படுகாயம் அடைந்தனர்.

இதைத் தொடர்ந்து சீக்கிய பயங்கரவாதிகள் எழெட்டு ஜீப்புகளில் அந்த ஊருக்குச் சென்றனர். துப்பாக்கியால் மாற்று சமூகத்தினரைச் சுட்டனர். அந்த இடத்திலேயே 8 பேர் இறந்தனர் ஒருவர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு இறந்தார்.





சர்க்கரை ஆலைகளில் உற்பத்தியாகும்

கரும்பு சக்கைக் காகித ஆலையை

உருவாக்கி

இந்தியாவுக்கு வழிகாட்டி

புகளூர்காகிதஆலைதிறப்புவிழாவிற்குவருகைதரும்

# எங்கள் இதயதெய்வம்

# மாண்புமிகு முதல்வர் டாக்டர்

# புரட்சிதலைவர்

# அவர்களே வருக! வருக!



★★ இங்ஙனம் ★★

| கே. பி. செல்வராஜ் | ஆர். நல்லுசாமி | என். சுப்பிரமணி |
|---|---|---|
| மாவட்ட செயலாளர் (தெற்கு)<br>கௌரவ தலைவர் | தலைவர் | பொது செயலாளர் |



## தமிழ்நாடு கூட்டுறவு மற்றும் பொதுத்துறை சர்க்கரை ஆலைகள் தொழில்நுட்ப ஊழியர்கள் சங்கம்